(இ) செலவிடப்பட்ட பணம் எவ்வளவு ?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) As already pointed out in the answer to Legislative Assembly Question No. 1904 on the floor of the House on 29th September 1961, it is not the practice with the Co-operative Societies to earmark in advance any fixed amount for the issue of various kinds of loans to the members.

(இ) During the Co-operative Year 1960–61, i.e., 1st July 1960 to 30th June 1961, loans amounting to Rs. 115·20 lakhs were issued to cultivating tenants by the co-operatives. During the current co-operative year, loans to the extent of Rs. 32.89 lakhs were issued to the landless and cultivating tenants for the three months from 1st July to 30th September 1961.

SRI S. M. ANNAMALAI : ஸார், இதற்கு முன்பு பதிலளிக்கின்ற போது, வாரம் பயிரிடுவோருக்கு டெனன்ஸி ரைட் இல்லாத காரணத்தினாலே அவர்கள் இந்தக் கடன் பெற முடியாத நிலை இருக்கிறது. ஆகவே, டெனன்ஸி ரைட் இருக்கக்கூடிய மசோதாவை சர்க்கார் கொண்டு வரப்போவதாகச் சொன்னார்கள். அவர்கள் அதிக பலனடைவதற்கு, இதை இன்னும் எப்போது கொண்டுவரப் போகிறார்கள் ?

THE HON. SRI R. VENKATARAMAN : சென்ற முறை பதில் சொல்கின்ற போது, நிலவுடமை இல்லாதவர்களுக்கு கடன் கொடுப்பதிலே கஷ்டமிருக்கிறது என்றும், அதை மாற்றியமைப்பதற்கு சர்க்கார் முயற்சி எடுப்பதாகவும் சொன்னார்கள். இப்போது அந்த முயற்சி வெற்றியடைந்து, நிலவுடமை இல்லாதவர்கள் அதாவது குத்தகைக்காரர்கள், வாரம்தார்கள் ஆகிய இவர்களுக்குக்கூட கடன் கொடுக்க ஏற்பாடு செய்திருக்கிறோம். அதன்படி 1960-61-ம் வருஷம் 1,20,000 லாண்டுலெஸ் கல்டிவேடிங் டெனன்டுகளுக்கு கடன் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த வருஷத்திலே ஜூலை முதல் செப்டம்பர் வரையிலே 33,357 பேருக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, இந்த ஸ்கீம் இப்போது நடைமுறையிலே இருக்கிறது.

SRI M. K. SOMASUNDARAM : ஸார், கொடுக்கப்படுகின்ற கடன் எந்த ரீதியிலே கொடுக்கப்பட்டு, வசூலிக்கப்படுகின்றது என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : அவர்கள் மகசூலை பாங்குக்கு அடமானம் கொடுக்கிறார்கள். ஆகவே, மகசூலைக் கொண்டு வந்து பாங்கிடம் கொடுத்து அதன்மூலம் கடன் திருப்பி வசூலிக்கப்படுகிறது.

*Price Fixation Committee*

* 2352 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் சார்பில் ஏற்படுத்தப்பட்ட விலைவாசிகள் நிர்ணயக் கமிட்டி தன் அறிக்கையை சர்க்காருக்கு அனுப்பியுள்ளது உண்மையா ?

(இ) அறிக்கையின் நகல் சட்டசபை நூல் நிலையத்தில் வைக்கப்படுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (அ) Yes, Sir.

(இ) The report is under examination and pending examination, the Government do not propose to place a copy of the report in the Library of the State Legislature.

SRI N. R. THIAGARAJAN: ஸார், காங்கிரஸ் கட்சி இது போன்று செய்யும்போது, இப்போது இங்கிருக்கிற 3, 4 எதிர்க் கட்சியினரும் இந்த விலைவாசியைக் குறித்து ஏதேனும் ரிப்போர்டு தயாரித்து அனுப்பி இருக்கிறார்களா? அப்படி அனுப்பியிரா விட்டால், அனுப்பும்படி கேட்டுக் கொள்ளப்படுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: யாராவது அனுப்பி யிருந்தால், அதை ஏற்றுக்கொண்டு, பரிசிலனை செய்யலாம். ஆனால் ஒருவரை அனுப்பும்படி வற்புறுத்திச் சொல்லவேண்டிய நிமித்தம் இல்லை.

*Bee-keeping training institute (Polur taluk)*

* 2354 *Q.*—SRI S. M. ANNAMALAI: கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப் பாரா—

(அ) வடாற்காடு மாவட்டம், போளூர் தாலுகா பட்டறைக் காடு தேனீ வளர்ப்புப் பயிற்சி பள்ளியில் எத்தனை பேர்கள் இது வரை பயிற்சி பெற்றனர்?

(இ) இப்போது எத்தனை பேர்கள் பயிற்சி பெறுகின்றனர்?

(உ) இவர்களில் எத்தனை பேர்களுக்கு எவ்வளவு உதவித் தொகை தரப்பட்டது?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (அ) 31 candidates.

(இ) 10 candidates.

(உ) 10 candidates—Rs. 1,200 as stipend (21 without stipend).

SRI S. M. ANNAMALAI: ஸார், 10 பேர்களுக்குத்தான் இந்த ஸ்டைபண்டு கொடுப்பதாக கனம் அமைச்சர் அவர்கள் சொல்கின்றார்கள். மீதி 21 பேருக்கு கொடுப்பதற்கு முன்வர வில்லை. இவர்கள் ஜவ்வாது மலைக்குப் போய் பயிற்சி பெற்று வருவதிலே மிகவும் கஷ்டப்படுகிறார்கள். ஆகவே, மீதி உள்ளவர் களுக்கும் இந்த ஸ்டைபண்டு கொடுக்க முன்வருவார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இந்தத் திட்டத் தின்படி 10 பேருக்குதான் ஒவ்வொரு நிலையத்திலும் மாதம் ஒன்றுக்கு 40 ரூபாய் கொடுப்பது என்று ஏற்பாடு செய்யப்பட் டிருக்கிறது. அதனாலே, 10 பேருக்கு மேலே கொடுப்பதற்கில்லை.